


திருவள்ளுவர்
ஆண்டு 2004
மாசி
1973 பிப்ரவரி



பிட்சாடணமூர்த்தி

கணேசன்

# தமிழ்நாடு தெய்விகப் பேரவை

சென்னை-18

உ

# இறைவணக்கப் பாடல்

## தாயுமானசுவாமிகள்

ஐவகை யெனும்பூத மாதியை வகுத்ததனு
ளசரசர பேதமான
யாவையும் வகுத்துநல் லறிவையும் வகுத்து மறை
யாதிநூலையும் வகுத்துச்
சைவமுத லாமளவில் சமயமும் வகுத்துமேற்
சமயங் கடந்தமோன
சமரசம் வகுத்தநீ யுன்னைநா னணுகவுந்
தண்ணருள் வகுக்கவிலையோ
பொய்வளரு நெஞ்சினர்கள் காணாத காட்சியே
பொய்யிலா மெய்யறிவிற்
போதபரி பூரண வகண்டிதா காரமாய்ப்
போக்குவர வற்ற பொருளே
தெய்வமறை முடிவான பிரணவ சொரூபியே
சித்தாந்த முத்திமுதலே
சிரகிரி விளங்கவரு தட்சிணா மூர்த்தியே
சின்மயா னந்தகுருவே.

[ஐந்து வகையான பூதபௌதிகாதிப் பிரபஞ்சங்களைப் படைத்து, அசையும்பொருள் அசையாப் பொருள் இவற்றை உண்டுபண்ணி, அவற்றிற்குத் தக்க அறிவையும் கொடுத்து, வேதாகம சாத்திரங்களை ஏற்படுத்தி, சைவ முதலிய அளவிலாச் சமயங்களையும் கற்பித்து சமயங்களுக்கு அதிதமாயுள்ளமோனசமரச நிலையையும் வகுத்துள்ள நீ, உன்னை நான் அடையத்தக்க தண்ணருள் புரியாததென்னையோ! பொய் மனமுடையார் காண முடியாத காட்சிப் பொருளே! மெய்யினர் அறிவில் ஞானாகர அகண்டித வடிவாய்ப் போதலும் வருதலும் இல்லாத புண்ணியப் பொருளே! வேதத்தினுச்சிப் பொருளாம் ஓம் எனும் பிரணவத்தின் வடிவானவனே! சித்தாந்த உண்மை முத்திக்கு வித்தான முதல்வனே! திரிசிரகிரியில் எழுந்தருளியுள்ள தென்முகக் கடவுளே! ஞானமயானந்த தேசிகனே!]






(திங்களிதழ்)

ஞாலம் நின் புகழே மிக வேண்டும் தென்
ஆலவாயில் உறையும் எம் ஆதியே.

| | | |
|---|---|---|
| மணி 1 | பரிதாபி மாசி<br>1973 பிப்ரவரி | ஓசை 8 |

அருளோசை அன்பர்களுக்கு வணக்கம்!

நம்முடைய இதழ் தொடங்கியதன் முக்கிய நோக்கம் சமயக் கல்வி போதனை செய்வதற்காகவே. சமய அறிவை வளர்ப்பதற்காக வினு விடைப் பகுதியும் இவ்விதழில் இடம் பெற்றிருக்கிறது. தொடங்கிய நாளிலிருந்து இதழின் சந்தாதாரர்களின் எண்ணிக்கை அதிகரித்துக் கொண்டே வருகிறது. ஆனுல் வினுவிடையில் பங்கு கொள்வோர் அந்த அளவுக்கு அதிகரிக்கவில்லை. பரிசு பெறுவதற்காக மட்டில் இந்தப் பகுதியென்று அன்பர்கள் மனத்தில் கொள்ளாமல் கட்டுரைகளைப் படித்து நினைவு படுத்திக் கொள்ளும் சமயப் பயிற்சி முறையே என்று கொள்ளும்படியும், இன்னும் நிறைய அன்பர்கள் வினுவிடைப் பகுதியில் கலந்து கொள்ளுமாறும் கேட்டுக் கொள்கிறோம். ஆங்கில மாதம் கடைசி தேதிக்குள் அனுப்பவேண்டும் சுருக்கமாகவும், விளக்கமாகவும் எழுதவேண்டும்.

அ. நாராயணசுவாமி, பி.ஏ.,
செயலாளர்.

## இந்த இதழில்

1. திருவளர்செல்வனுக்கு ... ... ... ... 3
2. வாழ்க்கைக்கு மையம் மனம் ... .... .... ... 7
3. சிவலிங்கத் திருவுருவம் ... .... ... ... 9
4. அறிவாராய்ச்சித் துறையும் அதனோடிணைந்த துறைகளும். 13
5. சென்னைக் கந்தகோட்டம் .... ... ... ... 18
6. குலசேகர ஆழ்வார் ... ... ... ... 21
7. அப்பர் அருட்குரு ... ... ... ... ... 25
8. வினுவிடை ... ... ... ... ...



## அருட்திரு. இரவீசுவரசுவாமி திருக்கோயில், ஆமூர் முசிரிவட்டம், திருச்சி மாவட்டம்.



வற்ருத வளம் நல்கும் காவிரி என்னும் பொன்னி நதியின் வடபாங்கர், ஆமூர் என்னும் சிவத்தலம் உள்ளது இது சூரியனல் வழிபடப்பெற்ற அருட்திருஆனந்தவல்லி அம்பிகை உடனுறை ரவீசுவரர் திருக்கோயில் கொண்டுள்ள திருத்தலம் ஆகும்.

இத்திருக்கோயில் திருப்பணிகள் முடிவுற்று அண்மையில் மிக சிறப்பாகக் குடமுழுக்கு நடைபெற்றுள்ளது. மேலும் இவ்வாலயத்தில் இராசகோபுரம், தளவரிசை செப்பனிடுதல் ஆகிய திருப்பணிகள் நடைபெற இருக்கின்றன. காதலாகிக் கசிந்து கண்ணீர் மல்கும் அருளாளர்களும், திருக்கோயில் வளம் பெற நன்னெஞ்சம் படைத்த அன்பர்களும் நிரம்பப்பொருளுதவி செய்ய வேண்டுகிருேம்.

இத்திருக்கோயிலில் நீண்ட காலமாக நிகழ்ந்து வரும் "திருஞான சம்பந்தர் வாரவழிபாட்டு மன்றம்" சமய சமுதாயப் பணிகள் மூலம் நன்கு செயல் பட்டும், ஆலய சார்பில் நன்கு பேணப் பெற்றும் வருகின்றது. இம்மன்றம் தமிழ்நாடு தெய்விகப் பேரவையுடன் இணைக்கப் பெற்ற அமைப்பாகும்.

இவ்வூர் ஒரு நல்ல மாதிரிக் கிராமம் என்று நடுவண் அரசினல் தேர்ந்தெடுக்கப்பெற்று மறைந்த இந்திய முதல்வர் மேன்மை தங்கிய நேரு அவர்களால் ஆயிரம் ரூபாய்கள் பரிசு பெற்ற பெருமைக்குரியது.

இந்தச்சிவத்தலம் திருச்சி–சேலம் செல்லும் சாலையில் தென்திருப்பதி என்னும் குணசிலத்திற்கு அண்மையில், 16 கல் தொலைவில் உள்ளது. இவ்வூர்க் காவிரியின் தென்பாங்கர் பெருகமணி என்னும் புகைவண்டி நிலையம் உள்ளது.

உடலுக்கு இன்பம் தரும் இயற்கைச் சூழலும் உள்ளத்திற்கு நலம் அருளும் மூர்த்தி தீர்த்தமும் ஒரு சேர அமைந்த இத்திருத்தலம் வருக—வந்து நலம் பெறுக—என அழைக்கின்ருேம்.

இவ்வாறு,

| | | |
|---|---|---|
| R. வெங்கடகிருஷ்ணன் B. Com. செயல் அலுவலர் & திருப்பணிக்குழு செயலாளர் & பொருளாளர் | P. தங்கராசுப்பிள்ளை வாரவழிபாட்டு மன்ற தலைவர் & திருப்பணிக்குழுத் தலைவர் | E இராசன்மூப்பன் நிர்வாக அறங்காவலர் & திருப்பணிக்குழு உபதலைவர் |

திருப்பணிக்குழு உறுப்பினர்கள்

R. ரெங்கனதய்யங்கார் — V. பாலதண்டாயுதம் செட்டியார்

K. அருணசல ஆச்சாரியார் — M. சந்தன முத்துராஜா.




*நல்வாழ்த்துக்கள் !*

இடையில் உனக்கு எழுதத் தவறியதற்கு வருந்துகின்ரேம் அன்பு கூர்ந்து பொறுத்துக்கொள்.

சமணர் உயிர்களை (சீவன்களை) வீடுபேறு பெற்ற அடிப்படையிலும்–பெருத அடிப்படையிலும் வகைப்படுத்துவர். எப்போதும் பாசத் தொடர்பு படாத உயிரை 'அநாதிசித்தன்' என்பர்; ஒரு போது பாசத் தொடர்பிலிருந்து விடுதலைபெற்ற உயிரைத், துன்பத்திலிருந்து நீங்கியவன் என்ற பொருளில் 'உபாதை நீங்கினவன்' என்பர். பாசத்தினின்றும் நீங்காதவனைப் 'பெத்தன்' என்பர், இங்ஙனம் வகைப்படுத்தியதில் பாசத்தினின்றும் என்றுமே நீக்கம் பெற முடியாத உயிர் என்ற ஒருநிலை இல்லை. ஆதலால், எல்லா உயிர்களும் வீடுபேறு அடையும் என்பது சமணர் கொள்கை. ஆனல், அது எப்படி? என்பது தான் ஆய்வுக்குரியது. இதற்குத் தெளிவான விடைகாண வேண்டுமென்ருல் உயிர்களுக்குப் பிறப்பு பலவா? ஒன்ரு ? ஒரு பிறப்பாயின் உயிர்கள் செய்த வினைகளை, அவற்றின் பயன்களை அப்பிறப்பிலேயே நீக்கிக் கொள்ளாவிடின் அவை பாசத்திலேயே நிலைபெற்றுக் கிடப்பதைத் தவிர வேறு வழி என்ன? என்ற வினைக்களுக்கு விடைகாண வேண்டும். உயிர்களுக்குப் பிறப்பு ஒன்றே என்னும் நெறிகள் இந்த வகையில் இடர்ப்படும். ஆனல் சமணம், உயிர்களுக்குப் பல பிறப்புக்கள் உண்டு என்ற கொள்கை யுடையது. அது மட்டுமல்ல. ஒரு பிறப்பு உயிர்கள் செய்த வினைக்கு ஈடாக அமைகின்றது என்பதும் சமணத்தின் கொள்கை. ஆனல் உயிர்கள் தாம் செய்த வினையின் பயனைத் துய்க்கும்படி செய்ய கடவுள் ஒருவர் வேண்டாம்; வினைகள் தாமாகவே உயிர்

களுக்குப் பயன்களைத் தந்து துய்ப்பிக்கச் செய்யும் என்பது சமணக் கொள்கை. சமணக் கொள்கைப்படி கடவுள் இல்லை. வினைகளே முழுவல்லமையுடையன. இந்தக் கொள்கை பகுத்தறிவுக்கு எவ்வளவு இசைந்து வருகிறது என்பதை உனக்கு உரியபோது விளக்கி எழுதுவோம்.

உலகத்தில், வினையை-கன்மத்தை ஒரு பௌதிகப் பொருளாக-சடப்பொருளாகக் கொள்வது சமண சமயமே. சமணக் கொள்கை வினையை, சடப்பொருளில் ஊடுருவியுள்ள கட்புலனுக்கு வாராத நுண்துகள்களாக-நுண்மையான அணுக்களாகக் கொள்கிறது. மேலும் அது 'புற்கல' இயல்பினது என்றும் கூறும். வினை-கன்மம் தொழிற்படுவதற்கு இசைந்த மிக நுண்மையான பௌதிகப் பொருள் உலகமெங்கணும் நிறைந்திருக்கிறது. சமணக் கொள்கைப்படி கன்மம் இருவகையே! ஒன்று, சீவனோடு ஒன்றியிருப்பது. இதனை, 'பாவகன்மம்' என்பர். மற்றது, உடலைச் சார்ந்தது. இதனை 'திரவிய கன்மம்' என்பர். சீவன் உடலைவிட்டு நீங்கும்போது கூட சீவனோடு ஒன்றிய கன்மம் அகலுவதில்லை. சீவன் வீடுபேறு அடையும் வரை அந்தக் கன்மமும் சீவனுக்கு உடனாக இருக்கும். அதுமட்டுமல்ல. உடலினை இழந்த சீவனுக்கு கன்மம் ஒரு சரீரமாகவும் அமைந்து விடுகிறது. அது 'கார்மண சரீரம்' எனப்படும். சீவன் மறுபிறப்பு எடுக்கும் வரை இந்தக் கார்மண-சரீரத்தோடு அது உலாவும். இந்தக் கன்மம் சீவனுட் சென்று செறிதலாகிய நிகழ்வு ஓயாது நடைபெற்றுக் கொண்டிருக்கிறது. இந்த நிலையில் சீவன் வீடுபேறு அடைய வேண்டுமானால் இரண்டு பணிகள் நிகழ வேண்டும். முதலாவது, புதிய கன்மம் ஏற்படாது தடுத்து நிறுத்துவது. இதனை 'சமுவரம்' என்பர். மற்றையது முன்பு ஈட்டிய கன்ம ஈட்டத்தை அழிப்பது. இதனை 'நிர்ச்சரம்' என்பர். இந்தக் கருத்து நமது சிவநெறியிலும் உண்டு. புதிய கன்மத்தை 'எதிர்வினை' என்பர்; பழைய ஈட்டத்தைப் 'பழவினை' என்பர். ஆனால், இடையில் துய்ப்பதை 'நுகர்வினை' என்று சைவம் கூறும். அது சைவத்திற்குரிய சிறப்பு.

புதிய கன்மத்தைத் தடுப்பது, பழைய கன்மத்தை அழிப்பது ஆகிய இவ்விரண்டையும் சாதிக்க சமண சமயம் மூன்று சாதனங்களை முறைப்படுத்திக் காட்டுகிறது. ஒன்று, சரியான கொள்கை (சம்யக் தரிசனம்) என்பது. இரண்டாவது, சரியான ஞானம் (சம்யக் ஞானம்) என்பது. மூன்ருவது சரியான சீலம் (சம்யக் சாரித்திரம்) என்பது. இவற்றையே சமணர்கள் மூன்று ரத்தினங்கள் (திரி ரத்தினம்) என்று கூறிப் போற்று

கின்றனர். இந்த மூன்றினுள்ளும் சரியான சீலம் (சம்யக் சாரித்திரம்) என்பதே முக்கியமானது. இந்தச் சரியான சீலத்தை யடைய ஐந்து நோன்புகள் வரையறுக்கப் பெற்றுள் ளன. துறவிகளுக்கு வரையறுக்கப் பெற்ற நோன்புகள் கடுமையானவை. துறவிகளுக்குரிய நோன்பு 'மகா விரதம்' எனப்பெறும். இல்லறத்தாருக்கு எளிமையான நோன்புகள் (அணுவிரதம்). நோன்பு ஐந்தனுள் தலையாயது அகிம்சையே! அதாவது கொல்லாமையே. ஆனால், காந்தியடிகள் வாழ்க்கை யிலும், வாக்கிலும் அகிம்சை என்பது கொல்லாமை மட்டுமல்ல. அகிம்சை என்ற சொல்லுக்கு வாழ்க்கையையே தவமாக்கும் பொருளைத் தந்தார். சமணர்கள் கொல்லாமை நோன்பை மேற்கொள்வதைப்போல உலகில் வேறு யாருமே மேற்கொள் வதில்லை என்று சொன்னாலும் மிகையில்லை. புத்தர்கூட கொல்லக் கூடாது என்றாரே தவிர, ஊன் உண்ண அனுமதித் தார் என்று ஒரு செய்திக் குறிப்பு உண்டு. அதாவது, மற்றவர்கள் தருகிற ஊனை மறுக்கக் கூடாது என்ற அடிப் படையில் ஏற்பது என்பது செய்தி. ஆனால் சமணர் ஊன் உண்பதை அறவே நீக்குவர். அகிம்சைக் கொள்கை மிக நுட்பமானது. பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாதது மட்டுமல்ல. நன்மை செய்வதே நிறைவான அகிம்சைக் கொள்கை. ஓர் உயிருக்குச் செய்ய வேண்டிய நன்மையைச் செய்யாமல் விடுவதால் அந்த உயிர் துன்புறும். அங்ஙனம் துன்புறுவதற்குக் காரணம் செய்ய வேண்டிய நன்மையைச் செய்யாததே. ஆதலால், அது உயிருக்குத் தீங்கு செய்தது போலவேயாம். சமணர்கள் பிற உயிர்களுக்குத் தீங்கு செய்யாமை என்ற நோன்பை மேற்கொண்டு ஒழுகும் பொழுது தம் உயிருக்குத் தீங்கு நேரிடுவதைப் பற்றி எண்ணுவதில்லை-கவலைப்படுவதில்லை. இந்த வகையில் தற்கொலை கூட அவர்கள் நெறிப்படி குற்றமல்ல. மண்ணிடை ஊரும் சிற்றுயிர்க்குக் கூட அவர்கள் துன்பம் செய்வதில்லை. காற்றில் உலாவும் சிற்றுயிர்களுக்குப், பாதுகாப்பு வழங்க, தங்கள் மூக்குகளில் துணியைக் கட்டிக் கொண்டு சுவாசிப்பர்.

சரியான கொள்கை (சரியான ஞானம்) கைவரப் பெற்று ஐம்பெரும் விரதங்களையும் முறையாக ஏற்றொழுகும் சீவன், கன்மத் தளையை நீக்கிக் கொண்டு அசீவத் தொடர்பற்று வீடு பேற்றையடையும். அந்நிலையில் 'சீவன்' அறிவுமயமாக விளங்கும். அந்நிலையில் எல்லையில்லா அறிவு (அனந்த ஞானம்) எல்லையில்லாக் காட்சி (அனந்த தரிசனம்) எல்லை யில்லாச் சக்தி (அனந்த வீரியம்) எல்லையில்லாச் சுகம் (அனந்த சுகம்) என்பன தாம் சீவனின் உடைமை.

மீண்டும், சமணர்களுக்குக் கடவுள் நம்பிக்கை இல்லை என்பதை நினைவு கொள். சமணத்தின் உயிர் (சீவன்) வீடு பேறு அடையத் துணை செய்வார் யாருமில்லை. சீவன் தன் சொந்த முயற்சியிலேயே வீட்டினையடையவேண்டும்; வீட்டினை அடைகிறது. இந்த கொள்கை, நமது சமயத்திற்கு முரண் பட்டது. உண்பிப்பாரில்லாமல் உண்ணுதல் இயலாது ஒரோ. வழி இயன்றாலும் சுவையிருப்பதில்லை; மகிழ்வு இருப்பதில்லை. அதனாலன்றோ, காலத்திற்குக் காலம் உண்பிப்பார்களைத் தாய், காதலி, சுற்றம் என்று வாழ்வியல் படைத்துக் காட்டுகிறது. அதுமட்டுமல்ல. எப்படி வலையே மீனைப்பிடிக்கும்? எப்படி வாளியே தண்ணீரை எடுக்கும்? அல்லது மீன் தானே வலைக்கு வருமா? அல்லது தண்ணீர் தானே வலையில் புகுமா? சராசரிப் பகுத்தறிவுக்குக் கூட இந்தக் கொள்கை ஈடு கொடுக்க முடியாது. சமண சமயத்தில் கடவுளும் இல்லை. அவன் துணை யும் சீவனுக்கு இல்லை, எனவே சமண சமயத்திற்கு பக்தி என்ற ஒரு கொள்கையில்லை. அடுத்து, சமணசமயம் கடவுள் இல்லை என்பது மட்டுமின்றி, கடவுள் உண்டு என்ற கொள்கையை மிகக் கடுமையாக மறுக்கிறது. அதைப்பற்றி அடுத்து ஆராய்வோம்.

என்றக்பெடியுகள்

---

அருளோசை சந்தா விகிதம்

| | | |
|---|---|---|
| | ரூ. | |
| சந்தா (ஓராண்டு) ... ... ... ... | 3 00 | (மூன்று) |

விளம்பர விகிதம்.

| | |
|---|---|
| பின் அட்டை வெளிப்புறம் ... ... ... | 100 00 |
| பின் அட்டை உட்புறம் ... ... ... | 50 00 |
| முன் அட்டை உட்புறம் ... ... ... | 75 00 |
| உள்ளே முழுப்பக்கம் ... ... ... | 25 00 |

மேற்கண்ட விகிதத்தில் அரை, கால் பக்க விளம்பரங்களும் ஏற்றுக் கொள்ளப்பெறும்.

தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

ஆசிரியர், "அருளோசை"
நெ. 9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-600018




## வாழ்க்கைக்கு மையம் மனம் *

(தவத்திரு. குன்றக்குடி அடிகளார்)

மனம், வாழ்க்கையின் மையம். ஆம்! உடல் பெரியதுதான்; கண்ணுக்குத் தெரியக் கூடியது தான். கால்கள் நடக்கின்றன; கைகள் செய்கின்றன; கண்கள் பார்க்கின்றன; வாய் பேசுகிறது. ஆயினும், சுதந்திரமாகவா? அவ்வவற்றின் விருப்பத்தின் அடிப்படையிலா" இல்லை, இல்லை! உள் நின்று இயக்குவது மனமே! மனம் உயிரின் மிகச் சிறந்த கருவி. ஆனாலும், உயிர், மனத்தை எடுத்துப் பயன் படுத்து வதைப் பொறுத்திருக்கிறது. மனம் உயிரின் நல்வளர்ச்சிக்கும் துணை செய்யலாம்; வீழ்ச்சிக்கும் துணை செய்யலாம்; 'மனம்போல வாழ்வு' என்பது அனுபவ வாக்கு. ஏன்? மனம் உடையவனே மனிதன். மனிதன் என்ற சொல்லே மனத்தின் அடிப்படையில் வந்தது என்று அறிஞர் கூறுவர். ஒரு மனிதனின் மனம் எப்படி இருக்கிறதோ, அது போல அவன் வாழ்வான். மனத்தில் கறையிருந்தால் வாழ்க்கையில் கறை இருக்கும்; மனத்தில் கள்ளம் இருந்தால் வாழ்க்கையில் கள்ளம் இருக்கும்; மனத்தில் கரவு இருந்தால் வாழ்க்கையில் சூது இருக்கும்; மனத்தில் காழ்ப்பு இருந்தால் வாழ்க்கையில் கலகம் இருக்கும்; மனத்தில் ஆத்திரம் இருந்தால் வாழ்க்கையில் அடி, உதை இருக்கும். இதுவே இயற்கையின் நியதி.

ஒரோவழி, மனமும் செயலும் மாறுபடுவதும் உண்டு. அந்த மாறு பாடு தற்காலிகமானதே தவிர நிலையானதன்று. அது நடிப்பு, விளைவு, செயலின் அடிப்படையில் அமையாது, மனத்தின் அடிப்படை யிலேயே அமையும். மனம், அன்பினைப் பற்றுமானால் வாழ்க்கை அமைதியைத் தழுவும்; மனம் அமைதியைத் தழுவுமானால் வாழ்க்கை அரவணைப்பில் நிகழும். வாழ்க்கை வளர்வது என்பது ஒருநாளில்

---

* இது "அருளோசை" 1972 அக்டோபர் திங்களிதழ்க் கட்டுரையின் தொடர்ச்சி.

திடீரென நிகழக் கூடியதல்ல. வாழ்க்கையென்ற மாளிகையைப் பல நாள் முயன்று கட்ட வேண்டும். நாள்தோறும் வாழ்க்கையைக் கூட்ட வேண்டும். கூட்டவேண்டுமென்று குறிப்பிடுவது வசதியையல்ல. நாள் தோறும் வீட்டைக் கூட்டுவது (பெருக்குவது) என்ற வழக்கு இருக்கிறது. கூட்டுவதன்மூலம் என்ன நிகழ்கிறது? தூய்மையற்ற குப்பை அகற்றப் படுகிறது; தூய்மை சேர்க்கப்படுகிறது; ஒளி ஊட்டப்படுகிறது; இன்ப நலம் இணைக்கப்படுகிறது. அதுபோலவே வாழ்க்கையில் நாள்தோறும் மனத்தைக் கூட்டுதல் நடைபெறவேண்டும். நேற்றைய வாழ்க்கையின் நடைமுறையில் மனத்தில் சேர்ந்த தூய்மைக் கேடு அகற்றப்பட வேண்டும். நேற்றுக் கூட்டப்பெற்ற வீட்டில் எப்படி இன்று குப்பை வந்து சேர்ந்ததோ, அதுபோல நம்முடைய வாழ்க்கையிலும் மனத்தில் தீயன சேர்தல் இயல்பு. அவற்றை நாள்தோறும் அகற்றி நல்லன சேர்த்துக் கொள்ளுதல் நல்லவண்ணம் வாழுதற்கு அடிப்படையாகும்.

வாழ்க்கையில் மேற்கொள்ள வேண்டிய அறங்கள் பலப்பல. அவை ஒவ்வொன்றையும் தனித்தனியே முயன்று அடைதல் எளிதன்று. ஆனால், மனத்தூய்மை என்ற பேரறத்தை நாம் அடைந்து விட்டால் அவ்வழி மற்ற அறங்களும் குண நலன்களும் வாழ்க்கையில் எளிதில் வந்து அமையும். ஒரு சின்னஞ் சிறிய புகைவண்டி நிலையத்திற்குச் சென்றால், அங்கிருந்து நாட்டின் பல்வேறு ஊர்களுக்கும் நேரிடையாகப் பயணத்தைத் தொடங்க முடியாது. ஆனால், ஒரு புகைவண்டிச் சந்திப்பு நிலையத்துக்குச் சென்றால் அங்கிருந்து நாட்டின் பல்வேறு பகுதிகளில் உள்ள ஊர்களுக்கும் பயணம் மேற்கொள்ள இயலும். நல்லறங்களின் சந்திப்பு எது? மனத்தூய்மை. மனத்தூய்மை என்ற ஒரு சிறந்த பண்பாட்டின் வழியாகப் பல்வேறு பண்பு நலன்களை நாம் பெறமுடியும்.

திருவள்ளுவர், மனத்தூய்மை என்ற கொள்கையில் ஆழமான நம்பிக்கையுடையவர். மனத்தூய்மையில்லாது செய்யப் பெறுகிற அறங்கள் அறங்களல்ல. அவை ஆரவாரத் தன்மையன-வெளிப்பகட்டு என்று திருவள்ளுவர் மறுக்கின்றார். சிலர், வீட்டிற்கு வெளியே வெள்ளை யடிப்பர். அங்ஙனம் செய்வது வாழ்வதற்காக அல்ல. மற்றவர்கள் மெச்ச வேண்டும் என்பதற்காக! ஆனால், அந்த வீட்டிற்குள்ளே சுவர் களில் ஏராளமான சந்து பொந்துகளும் அவற்றுக்குள்ளே உயிர்குடிக்கும் நச்சுப் பூச்சிகளும் வாழும். அதுபோல, இன்று பலர் மனத்தில் கறுப்பு வைத்து வெளிவேடம் புனைந்து நாடகமாடுகின்றனர்; நல்லனபோலக் காட்சியளிக்கும் தீயனவற்றைச் செய்கின்றனர். இவையெல்லாம் எப்படி அறமாக முடியும்? இதனைத் திருவள்ளுவர்

"மனத்துக்கண் மாசில னாதல் அனைத்தறன்
ஆகுல நீர பிற"

என்றார்.

(தொடரும்)




## சிவலிங்கத் திருவுருவம்

[புலவர் திரு. ந. ரா. முருகவேள், எம்.ஏ., எம்.ஓ.எல்.,]

முன்னுரை :

நமது இந்திய நாட்டிலும், குறிப்பாக இந்து மதத்திலும் சிறப்பாகப் போற்றி வழிபடப்பெறும் தெய்வத் திருவுருவங்கள் அல்லது அடையாளங்களில் சிவலிங்கத் திருவுருவம் மிகவும் சிறப்புடைய தொன்ருகும். இமயம் முதல் குமரி வரையிலுள்ள எண்ணிறந்த எத்தனையோ பல தலங்களிலும் கோயில்களிலும் சிவலிங்கத் திருவுருவங்கள் சிறப்புற நிறுவப்பட்டுத் தொன்னெடுங்காலம் முதல் இன்றளவும், இந்தியத் துணைக் கண்டம் முழுவதிலுமே, பல கோடிக்கணக்கான மக்களால் பரவிப் போற்றி வணங்கப்பட்டு வருகின்றன.

சிவலிங்கத் திருவுருவின் பழமையும் பெருமையும் எல்லையற்றன. மொகஞ்சதாரோ ஹாரப்பா முதலிய இடங்களில் நிகழ்ந்த அகழ்வு ஆராய்ச்சிகளில், மிகப்பல சிவலிங்கத் திருவுருவங்கள் கண்டெடுக்கப் பெற்றுள்ளன. அதனுல் சற்றேறத்தாழப் பத்தாயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்ட சிந்துவெளி நாகரிக காலத்திற்கு முன்னரே, சிவலிங்க வழிபாடு இந்திய நாட்டில் நிலவி இருந்தமை புலனுகிறது.

சிந்து வெளிப் பகுதியில் கிடைத்த சிவலிங்கத் திருவுருவங்கள் மிகப் பலவற்றைக் கண்ட மேலைநாட்டு ஆராய்ச்சியாளர்கள் வியப்படைந்து உலகிலேயே மிகவும் தொன்மை வாய்ந்த சமயம், சைவ சமயமே ஆதல் வேண்டும் என்னும் உண்மையை உணர்ந்து குறிப்பிட்டுள்ளனர். (1)

உலகெங்கும் நிலவியமை :

சிவலிங்கத் திருவுருவங்களும், சிவலிங்க வழிபாடும், இந்திய நாட்டில் மட்டுமே யன்றி எகிப்து, சிரியா, பாரசீகம், சிறிய ஆசியா, துருக்கி, கிரீசு, இத்தாலி, ஆப்பிரிக்கா, அமெரிக்கா, திபெத்து, சீனு, ஜப்பான் முதலிய உலகின் பல பகுதிகளிலும் ஒரு காலத்தில் பெரிதும் பரவியிருந்தன. இதனை 'வெஸ்ட்ராப்', இ.பி. டெய்லர், ஆலன் கிராண்ட் முதலிய மேற்புல அறிஞர்கள் தத்தம் நூல்களில் ஆராய்ந்து குறிப்பிட்டுள்ளனர். (2)

இயற்கைக்கு இயைந்தது :

இறைவனைக் குறிக்கும் திரு அடையாளங்கள், வெவ்வேறு சமயங்களிலும் பல்வேறு வகையில் விளங்கி வருதலை நாம் காண்கின்றோம். அத்தகைய அடையாளப் பொருள்களில், இயற்கைக்கு ஏற்ற நிலையில் சிவலிங்கத் திருவுருவம் மிக்க சிறப்பு வாய்ந்த தொன்றாகக் காணப்படுகின்றது. இயற்கையின் நுட்பத்தினை இனிது ஆராய்ந்துணர்ந்த அடிப்படையிலேயே, நம் முன்னோர்கள் இறைவனின் திருவடையாளங்களுள் ஒன்றாகச் சிவலிங்கத்தினைத் தேர்ந்தெடுத்து அமைத்துள்ளனர். நாகலிங்கப்பூ என்பதன் நல்லமைப்பை உற்றுநோக்கி உணரும்போது, இவ்வுண்மை செவ்விதிற் புலனாகிறது. மேலும் வடக்கே இமய மலைக்கு அணித்தேயுள்ள அமரநாதம் என்னும் புனித தலத்தில், இயற்கையாகவே பனிக் கட்டியினால் சிவலிங்கத் திருவுருவம் அமைந்து விளங்கும் திறனும், உன்னுந்தோறும் நமக்கு உள்ளத்தில் வியப்பும் விம்மிதமும் விளைவிக்கின்றது. இவ்வாற்றால் இறைவனின் இயற்கைத் திருவுருவம் சிவலிங்கமே ஆகும் என்பதனை நாம் தெள்ளிதின் அறிகின்றோம்.

சேக்கிழார் சுவாமிகள் :

கடவுளைச் சில மதங்கள் அருவம் என்று கூறுகின்றன. மற்றும் சில மதங்களோ உருவம் என்று கொள்கின்றன. இவ்விருவேறு திறமான கொள்கையினருக்கும் ஏற்புடைய நிலையில் சிவலிங்கம் சிறப்புற்றுத் திகழ்கின்றது. முகம் கை கால் முதலிய உறுப்புக்கள் எதுவும் இல்லாமல் இருத்தலின் ஒரு வகையில் அருவமாகவும், கண்ணுக்குப் புலனாகும் வகையில் ஒரு பிழம்பாகத் தோன்றித் திகழ்தலின் ஒருவகையில் உருவமாகவும், இரண்டிற்கும் இடைப்பட்ட நிலையில் அருவுருவம் ஆகச் சிவலிங்கம் அமைந்து விளங்குகிறது. இச்சிறப்பினையே,

“காணாத அருவினுக்கும்
உருவினுக்கும் காரணமாய்
நீள் நாகம் அணிந்தார்க்கு
நிகழ்குறியாம் சிவலிங்கம்”

என்னும் வரிகளில் பெரியபுராணத்தில் சேக்கிழார் சுவாமிகள் அழகுற விளக்கி அருளியுள்ளார். எனவே இறைவனின் அருவுருவத் திருமேனியே சிவலிங்கம் என்றும், இதனிலிருந்தே இறைவனின் ஏனைப் பல திருவுருவங்கள் எல்லாம் தோன்றுகின்றன என்றும் நாம் அறிந்து கொள்ளலாம்.

பாம்பன் சுவாமிகள் :

அண்டம் எனப்படும் பரந்த இப்பெரிய உலகமே ஒருவகையில் சிவலிங்கம் எனும்படித் திகழ்கின்றது. சிவலிங்கத்தின் அடிப்பகுதி, பீடம் அல்லது ஆவிடை எனப்படும். அதன் நடுவில் நீண்டு விளங்கும் பிழம்பு, லிங்கம் எனப்படும். இம்முறையில் இவ்வுலகின் வானப் பெருவடிவே லிங்கம் ஆகவும், பரந்து விரிந்த நிலப்பரப்பே ஆவிடை என்னும்

பீடமாகவும் அமைந்துள்ளது. அதற்கு இயையப் பிண்டம் எனப்படும் நம் உடம்பின் அமைப்பும், சிவலிங்கம் போலவே ஞானிகளின் காட்சிக்கு நலமுற அமைந்து தோன்றுகின்றது. "மானுடர் ஆக்கை வடிவு சிவலிங்கம்" என்பது திருமூலர் திருமந்திரம். நம் உடம்பில் தோளுக்கு மேலுள்ள பகுதியை இலிங்கமாகவும், மற்றைய கீழ்ப்பகுதியை ஆவிடை எனும் பீடமாகவும் கொள்ளுதல் வேண்டும். இது தூலவடிவம். சூக்கும நிலையில், நம்முடைய இதய கமலம் பீடம் எனவும், அங்கே நிலவும் சிதாகாசம் என்பது இலிங்கமாகவும் உள்ளன. இனி இதற்கும் மேற்பட்ட அதிசூக்குமம் ஆன நிலையிலும், ஞானிகள் சிவலிங்கத் திருவுருவினைத் தமது ஞானக்கண்களால் காண்கின்றனர். சிதாகாசம் என்பது ஆன்மாவாக அமைய, அதனுடைய இதய கமலம் பீடமாக விளங்க, அங்கே உள்ள மகா சிதாகாசம் என்பது தான், உயிருக்கு உயிராக உள்ள இறைவனின் வடிவமாகிய சிவலிங்கத் திருவுருவம் ஆகும். இத்தகைய நுட்பங்களைத் தவத்தாலும் ஞானத்தாலும் உணர்ந்து, திருவருட் பேற்றால் சிவலிங்க மயமாக விளங்கப் பெற்று இன்புறுதலே, வீடுபேறு எனவும் ஞானிகள் கூறுவர். திருவெண்காடர் என்னும் பட்டினத்தடிகள் திருவொற்றியூரில் சிவலிங்க மயமாகும் இத்தகைய சிறந்த முத்தியினையே பெற்றார் என்றும் பெரியோர்கள் கூறுவர்.

தத்துவ நுட்பங்கள் :

திருமூலர் அருளிய திருமந்திரம் இலிங்கத்தின் சிறப்பினை, அண்டலிங்கம் பிண்டலிங்கம் சதாசிவலிங்கம் ஆத்மலிங்கம் ஞானலிங்கம் சிவலிங்கம் எனப் பல தலைப்புகளில் விளக்கியுள்ளது. இவ்வுலகை உள்நோக்கி ஆராயுங்கால், ஓங்கியுயர்ந்த வானமே இலிங்கம், சுற்றிச் சூழ்ந்து அகன்றுள்ள எண்டிசையின் விரிவே ஆவிடை, பரந்து விரிந்துள்ள நிலப்பரப்பே பீடம் எனலாம் படி அமைந்திருத்தலை உணரலாம்.

கோயில்களிற் கருவறையின் மேலுள்ள விமானம் தூலலிங்கம். கருவறையின் உள்ளே இருப்பது சூக்குமலிங்கம். விந்து நாதம் என்னும் தத்துவங்களை முறையே வட்ட வடிவமாயும், நீண்ட கோடு வடிவமாகவும் பெரியோர்கள் குறிப்பர். விந்து நாதம் ஆகியவை இரண்டும் சேர்ந்து அமைந்த உருவமே சிவலிங்கம்.

மேலும் சிவலிங்கமானது, பிரணவம் என்னும் பெருஞ் சிறப்புடைய மந்திரத்தின் அடையாளமாகவும் கொள்ளப்பெறும். இலிங்கத்தின் அடிப்பகுதியாகிய பீடம் ஓங்காரம், அதன் நடுப்பகுதியாகிய கண்டம் மகாரம், உள்வட்டம் உகாரம், மேற்பகுதி அகாரம்.

சோதியாய்ச் சுடராய்ச் சூழொளி விளக்காய்த் திகழும் இறைவனின் திருவடையாளமே கோயில்களிலுள்ள சிவலிங்கம்; இறைவனல்லாத ஏனைய உயிரினங்களைக் குறிக்கும் அடையாளமே நந்தி வடிவம். இறைவனை வழிபட்டு உயிர்கள் கழித்துக் கொள்ளும் அறியாமையாகிய மலமே. பலிபீடம் இவ்வுண்மையினை,




" ஆய பதிதான் அருட்சிவ லிங்கம்ஆம்;
ஆய பசுவும் அடலேறு என நிற்கும் ;
ஆய பலிபீடம் ஆகும் நற்பாசம்;
ஆய அரன்நிலை ஆய்ந்துகொள் வார்க்கே "

என்னும் திருமந்திரச் செய்யுள் தெளிவுற உணர்த்துதல் காணலாம். இவ்வாறே, நமது மனித ஊனுடம்பே ஓர் அழகிய கோயில் (ஆலயம்); அதன்கண் உள்ளேயுள்ள மனம் அல்லது உள்ளம், அவ்வழகிய கோயிலின் கருவறை (பெருங்கோயில்); முகம் கோபுரம்; வாய் கோபுர வாயில்; சீவன், கோயிற் கருவறையில் உள்ள சிவலிங்கம். ஐம்பொறிகளும் புலன்களும் உடம்பாகிய கோயிலில் ஏற்றப் பெற்றுள்ள காளாமணி விளக்குகள் என உருவகம் செய்து உணர்த்தும் பிறிதோர் அரிய திருமந்திரப் பாடலும், இங்கு நாம் உணர்ந்து இன்புறுதற் குரியது.

" உள்ளம் பெருங்கோயில்; ஊனுடம்பு ஆலயம்;
வள்ளற் பிரானார்க்கு வாய்கோபுர வாயில்;
தெள்ளத் தெளிந்தார்க்குச் சீவன் சிவலிங்கம் ;
கள்ளப் புலன்ஐந்தும் காளா மணிவிளக்கே "

முடிவுரை :

இத்தகைய சிறந்த சிவலிங்க வழிபாட்டினை நாம் அனைவரும் குருவருளும் திருவருளும் பெற்று, இயன்றவரை இடைவிடாமற் செய்ய நம் வாழ்நாளில் முயன்று உய்வோமாக.

---

(1) "Among the many revelations that Mohanjo Daro and Harappa have had in store for us, none perhaps is more remarkable than this discovery that Saivism has a history going back to the *Chalco-lithic age* or *perhaps even further still* and that it thus takes its place as *the most ancient living faith in the world*."

—Sir John Marshall

(2) "The practice of Linga-worship was so general as to have spread itself over a large part of the habitable globe, for it flourised for many ages in *Egypt* and *Syriya*, *Persia*, *Asia-Minor*, *Greece*, and *Italy*. It still is in vigour in India and many parts of *America* and was even found in *America* on its discovery by the Spaniards being regarded as the most sacred object of worship and consecrated by religion. The culture was associated with the very idea and sentiment which was regarded as ennobling to man."

—H. M. Westropp.




## அறிவாராய்ச்சித் துறையும் அதனோடு இணைந்த துறைகளும்

[வித்துவான் திரு. வை. இரத்தினசபாபதி, எம்.ஏ., பி.ஓ.எல்.,]

முன்னுரை :

அறிவைப் பற்றிய ஆராய்ச்சியை மேற்கொள்ளுபவர்கள் பொதுவாக, அறிந்தோ அறியாமலோ, தம்மை மூன்று துறைகளோடு இணைத்துக் கொண்டு விடுவார்கள் என்பதையும் அறிவாராய்ச்சி துறைக்கும் ஏனை மூன்று துறைகளுக்கும் உள்ள வேறுபாடுகளைத் தெளிவாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்பதும் சென்ற கட்டுரையில் வலியுறுத்தப் பெற்றன. அவற்றை விரிவாக இணைத்தும் வேறுபடுத்தியும் காண்பதே இக்கட்டுரையின் நோக்கம்.

மூன்று துறைகள்: உள்ளத்தியல் (Psychology), அளவையியல் (Logic), அடிப்படைத் தத்துவ இயல் (Metaphysics) ஆகிய மூன்று துறைகள் அறிவாராய்ச்சியியலோடு இணைந்து நிற்கின்றன. எல்லாப் பொருள்களையும் நிறுத்து அளவு செய்வதற்குத் தராசு துணைசெய்கிறது. ஆனால் தராசு சரியானதா? பிழையானதா? என்று ஆராய்தலும் தேவையே! அவ்வாறே எல்லாத் துறைகளையும் அளந்து முறைப் படுத்திப் பார்க்க அறிவு தேவைதான் என்றாலும் அறிவையும் தனியாக நிறுத்தி ஆராய்ந்து பார்க்க வேண்டிய அவசியமும் வேண்டும். அத்தகைய அடிப்படையில் அறிவைத் தனியே நிறுத்தி ஆராய்ந்து பார்ப்பது தான் அறிவாராய்ச்சியியல். (இக்கருத்து முன்னேயும் விளக்கப் பெற்றது.)

அறிவாராய்ச்சியியலும் உள்ளத்தியலும்: உள்ளத்தியலை மனோ தத்துவ இயல் எனவும் வழங்குவர். மேலைநாட்டினர் எழுத்துக்களில் சில சொற்கள் கவர் பொருள்பட வழங்கப் பெறுதலைக் காணலாம். Mind என்ற சொல் மனத்தையும் குறிக்கும்; உயிரையும் குறிக்கும். Psychology என்ற சொல்லின் முதற்பகுதியாகிய Psyche என்பதை உயிரைக் குறிக்க எடுத்தாளுவதும் உண்டு. மனத்தினுடைய அமைப்பு, அது செயலாற்றும் முறை ஆகியவைகளை விரிவாக ஆராயும் துறை மனோதத்துவத்துறை.

மனமானது அறிவுப்பகுதி (Cognition), இச்சைப்பகுதி (Affection), செயல்பகுதி (Conation) என்ற மூன்றினுடைய இணைப்பு எனக் கருது கின்றனர். இவ்விடத்தில் வேறு சில கருத்துக்களையும் நாம் இணைத்துக் காணுதல் வேண்டும்.

சைவ சித்தாந்த முறைப்படி, உயிரானது அறிவு, இச்சை, செயல் என்ற மூன்றாலும் உணரப் பெறுகிறது அல்லது மூன்றையும் உடைய தாகக் கருதப் பெறுகிறது. அறநூற் கொள்கையினர் அறச்சட்டங்களை வரையறை செய்யும் போது இம்மூன்றும் இணையக் கூடிய வகையில் சிந்தித்தே அமைக்கின்றனர்.

பகவத் கீதையில் வருகிற ஞானயோகம், பக்தியோகம், கர்மயோகம் ஆகியவைகள் இவ்வடிப்படையில் அமைக்கப் பெற்றவை என்று கூறும் ஆய்வுரையும் நம் சிந்தனைக் குரியதே. அறிவு, இச்சை, செயல் ஆகிய மூன்றும் ஒருசேர வளர்ச்சி பெற்று, இணையும்போது தான் உயிர் உண்மையான விடுதலையைப் பெறுகிறது என்பது இப்பிரிப்பின் கருத்து.

இறைவனும் செயல், அறிவு, இச்சை என்ற மூன்றாகத் தான் தொழிற்படுகிறான். அதுவே சச்சிதானந்தம் (சத்+சித்+ஆனந்தம்). அதனாலேயே அவனுடைய சக்திகள் கிரியாசக்தி, ஞானசக்தி, இச்சா சக்தி என மூன்றாகப் பிரித்துப் பேசப்பெறுகின்றன என்பர்.

இறைவனும் உயிரும் இரண்டறக் கலக்கும்போது உயிரின் அறிவுப் பகுதி இறைவனின் அறிவுப் பகுதியோடும், உயிரின் செயற்பகுதி இறைவனின் செயற் பகுதியோடும், உயிரின் இச்சைப்பகுதி இறைவனின் இச்சைப் பகுதியோடும் இணைகின்றன என்ற கருத்தும் உண்டு.

சுருங்கச் சொன்னால் 'முத்தமிழ்' என்ற பிரிப்புங்கூட இவ்வாறே அமைக்கப் பெற்றனவாம். இயற்றமிழ் அறிவையும், இசைத்தமிழ் உணர்ச்சியையும், நாடகத் தமிழ் செயலையும் தொடர்பு கொண்டுள்ளன அல்லது செம்மைப்படுத்துகின்றன என்ற கருத்துண்டு.

மனத்தின் பகுதியாகி இம்மூன்று துறைகளையும் இணைக்கும் முறையைத் தமிழகத்துச் சான்றோர் மிக்க நுட்பமான முறையில் ஆய்ந்துள்ளனர். எனினும் அவர்கள் மேற்கொண்ட அமைப்பைப் பின்னுள்ளோர் தழுவிக் கைக்கொண்டு போற்றவில்லை என்பதைக் காணலாம்.

சைவசித்தாந்தத் தத்துவ அமைப்பில் மனம், புத்தி, சித்தம், அகங்காரம் என்ற நான்கையும் அந்தக் கரணம் (உட்கருவி) என அமைத்தனர். அவை தனித் தனிப் பொருள்கள் அல்ல; ஒன்றே செயல் வேறுபாடு காரணமாக வெவ்வேறு பெயரைப் பெறுகிறது. ஒருவன் வகுப்புக்குச் சென்று மாணாக்கர்களுக்குப் பாடம் நடத்தும்போது 'ஆசிரியன்' எனப்படுகிறான்; அவனே மாலையில் பொதுமக்கள் செல்லும் நடைபாதையைக் கூட்டும்போது 'சமுதாயத் தொண்டன்' எனப்படுகிறான். ஒரே பொருள் மேற்கொள்ளும் வேலை மாற்றங்களின் காரணமாக வேறு வேறு பெயர்களைப் பெறுகின்றன.

இவ்வாறே தமிழ் இலக்கியங்களை முறையாக ஒருங்கிணைத்துக் காண்போமானால், ஒரு உண்மை புலப்படும். மனம் என்று குறிப்பிடப் பெறும் பொருளுக்கு, மனம், நெஞ்சம், உள்ளம் என்ற மூன்று சொற்கள் உள்ளன. இம்மூன்றையும் இக்காலத்தே, இலக்கியமாகட்டும், வேறாகட்டும்; எழுத்து வழக்காகட்டும் பேச்சுவழக்காகட்டும்; வேறுபாடு இல்லாமலே வழங்கக் காணலாம். முதன் முதலிற் காரணங்கருதிப் பெயர் வைக்கும்போது நான்கு கால்களையுடையது நாற்காலி; மூன்று

கால்களையுடையது முக்காலி, என அமைத்திருப்பார்கள். பிறகு மேஜை முதலியன செய்யப் பெற்ற போது, அவைகளும் நான்கு கால்களையுடைய காரணத்தால் நாற்காலி என்று வழங்கியிருப்பார்கள்! வழங்கலாம்; காரணப் பொருத்தம் இருக்கிறது; வேறுபடுத்திக் காட்ட வேண்டும் என்பதற்காக வேறு வேறு பெயர்களை அமைத்திருப்பார்கள். ஆனால் நாற்காலி என்ற முதன்மைப் பெயர் அப்படியே அந்தப் பொருளைக் குறிக்கும் நிலையில் நின்று விட்டது. இது இயல்பே! ஆனால் ஒரு பொருளைக் குறிப்பிடப் பல பெயர்கள் வருமானால், அவை அவ்வொரு பொருளின் வேறுவேறு பண்புகளை, திறமைகளை, தொழில்களைக் குறிப்பனவாகத்தான் அமைய வேண்டும்; அமைய முடியும். வேறுபாடு தெரியாதபோது, எல்லாப் பெயர்களையும் வேண்டியவாறே வழங்குவர். இவ்வாறுதான் மனம் என்ற பொருளைப் பற்றிய சொற்களும்; அவைகளைப் பயன்படுத்தும் முறையும்.

'மனம்' என்பதை முதலில் எடுத்துக்கொள்ளலாம். 'மன்' என்ற சொல்லின் அடியாக வந்திருக்க வேண்டும். 'மன்' நிலைத்தல். மன்னு உலகத்து மன்னுதல் குறித்தோர் என்ற புறநானூற்றைக் காண்க. தன்னை நிலைக்கச் செய்பவன் மனிதன் ஆகிறான். ஒருவன் தன்னை உலகில் நிலைக்கச் செய்ய வேண்டும் எனின் அறிவால் அன்று; இச்சையால் அன்று; செயலால் தான். அறிவை வளர்த்தலும் வேண்டும்; உலகத்தனைவரையும் ஒன்று என இச்சை செய்து விரும்பு தலும் தேவையே! அறிந்தாலோ விரும்பினாலோ மட்டும் போதுமா? போதா; அவை செயல் வடிவம் பெற வேண்டும். எண்பது கோடி நினைந்து எண்ணுவர்; உலகில் அமுத ஆறுகள் ஓட வேண்டும் என்று ஆசைப்படுவர். இவற்றால் நிலை பெற்ற பேற்றைப் பெற முடியாது. அறிவால் அறிந்தவற்றை, உலகினரை வாழவைக்க வேண்டும் என ஆசைப்பட்டு, செயற்படுத்தினால்தான்—செயற்படுத்தியவர் தான் நிலைக்க முடியும். இரப்பவர்களுக்கு ஒன்று கொடுக்க வேண்டும் என்று அறிந்தவர் மேல் புகழ் நிலைக்காது; இரப்பவர்களுக்கு ஒன்று கொடுக்க வேண்டும் என்று ஆசைப்பட்டவர் மேல் புகழ் நிலைப்பது இல்லை; "இரப் பார்க்கு ஒன்று ஈவார் மேல் நிற்கும் புகழ்" என்றார் திருவள்ளுவர். எனவே செயற்பாட்டு நிலை வந்தால் தான் நிலைத்தல் உண்டாகும். எனவே 'மனம்' என்பது செயல் நிலைப் பகுதியைக் குறிக்க வந்த சொல் எனக் கொள்ளலாம்.

"மனத்துக்கண் மாசு இலன் ஆதல் அனைத்து அறன்
ஆகுல நீர பிற"

என்ற குறளில் செயல் தூய்மையை வற்புறுத்தினர் எனக் கொள்ளலாம். பிறிதோரிடத்தில் "செயற்பாலது ஓரும் அறனே" என்றார். எனவே செயல் தூய்மை என்பதும் 'அறம்' என்பதும், 'செய்ய வேண்டியவை களைச் செய்தல்' என்ற பொருளைத் தந்தன. உயிரின் பொது அறம் — பொதுத்தன்மை என்பது செயற்படுதல். செய்யாது சோம்பியிருத்தல் பழி. அது உயிரை அழித்துவிடும். இதனாலேயே திருவள்ளுவர் 'நல்கூர்தல்' என்ற வறுமைக்கு விளக்கம் கூறும் போது "செயும்நீர செய்யாது அமைதல்" என்றார். 'மனமாசு' என்பது செய்யவேண்டியவை களைச் செய்யா திருத்தல். 'செயல் செய்யேன்' என்பவன், 'உழைக்க' மாட்டேன்' என்பவன், கடமைகளைச் செயலாற்றாதவன், பிறர் உழைப் பில் வாழ்பவன் அனைவருமே மனமாசு உள்ளவர்கள். தனக்கென அமைந்த கருமமே கண்ணாயினர் எனப்படுபவர்களே மனமாசு நீங்கிய

வர்கள். அவர்களே அறச்சான்ரோர்கள். ஒரு எடுத்துக் காட்டு. சொல்லும் செயலும் இணைய வேண்டும். இணைத்து வாழ்பவன் சிறந்த வாழ்க்கையாளன். இதனை "மனத்தோடு வாய்மை மொழியின்" என்ருர். செயலோடு சொல்லும் இணையின் தவத்தொடு தானம் செய்பவர்களை விடத் தலையாயவன் என்ருர். மனத்தைத் தவத்தோடு இணைக்க வேண்டும்; தவத்துக்குத் 'தம் கருமம் செய்வார்' என விளக்கங் காண வேண்டும். புறப்பேச்சு, பொருமைப் பேச்சு, பொச்சாத்தல் இன்றி, தன்செயலைச் செயற்படுத்துபவனே மனிதன். எனவே மனம் என்பது செயற் பகுதியை விளக்கும் சொல். இவ்வாறின்றி, மனத்தொடு பொருந்த வாய்மையைச் சொல்ல வேண்டும் என்று பொருள் கூறினல் என்ன? என்ற வினு எழும். வாய்மையைச் சொல்லும்போது மனத் தோடு பொருந்தச் சொன்னல் என்ன? மனம் வேறுபட்டுச் சொன்னல் என்ன? வாய்மை வாய்மைதானே! திருடன் மனத்தோடு பொருந்தா மல் வாய்மை சொல்கிருன். அதனல் 'வாய்மை' என்பது பழுதுற்று போய்விடும் !

மேற்குறிப்பிட்ட கருத்தாலேயே அறநூல் வல்லவர்கள், அரசியல் மூலம் அறத்தை வலியுறுத்துகிறவர்கள் செயற்பாட்டையே வலியுறுத் தினர்கள். குடும்பக் கட்டுப்பாட்டு முறையை அறுவை முறையில் ஒருவன் மனம் இல்லாமலேயே ஏற்றுக் கொள்கிருன் என்ருல் அறுவை முறை மனம் இல்லாமல் ஒத்துக் கொண்ட காரணத்தால் பழுது பட்டா போய்விடும்! இதனலேயே அறமுறையைச் 'சாதனம்' என்றே சொல்லும் வழக்கம் எழுந்தது. இம்முறைக்கு ஒப்பவே அறன் வலியுறுத்தலில் செயல் முறையே வற்புறுத்தப் பெற்றது. செய்ய வேண்டிய கடமைகளைச் செய்தலே அறம். எனவே 'மனம்' என்பது 'செயல் மூலம் தன்னை நிலைநிறுத்துதல்' என்ற பொருளைத் தருதற்காக அமைக்கப் பெற்றது எனக் கொள்ளலாம்.

அடுத்தது நெஞ்சம் இச்சொல் நெய்தல் என்ற சொல்லோடு தொடர்புடையதாகக் கொள்ளலாம். 'நெய்தல்' இருவகையில் பொருள் படும். நூல் நெய்தல் என்பது ஒன்று; நெய்போல் உருகுதல் என்பது மற்ருென்று. முன்னது இழைகள் ஒன்ரோடு ஒன்று நெருங்க இணைந்து பொருந்துதல் என்பதாகக் கொள்ளலாம். பின்னது தான் நெய்தல் திணையைக் குறிக்கும் சொல். எண்ணங்கள் ஒன்ரோடு ஒன்று பொருந்த இணைதல் என்ற பொருளில் நெஞ்சினைக் கொண்டால் அது அறிவுப் பகுதியைச் சார்ந்த ஒன்று எனக் கொள்ளலாம். "தன்நெஞ்சு அறிவது பொய்யற்க" என்ற திருக்குறளிலும் நெஞ்சு நினைவதற்கு உரியதாகக் கொள்ளப் பெறுகிறது. முருகன் கிரவுஞ்சம் என்னும் மலையை வேல் கொண்டு பிளந்தான். கிரவுஞ்சம் என்ற மலையை அறியாமை என உருவகம் செய்வர். வேலாயுதம் ஞானம் ஆகும். ஞானமயமாக அமைந்த வேலாயுதத்தை எறிந்து அறியாமையாகிய மலையை அழித்தமையைக் கூறும், குறுந்தொகைக் கடவுள் வாழ்த்தின் ஆசிரியர், "குன்றின் நெஞ்சு பக எறிந்த அஞ்சுடர் நெடுவேல்" என்றே குறிப்பிட்டார். 'நெஞ்சு' அறிவின் பகுதியைக் குறிக்க வந்ததாகக் கொண்டார் பாரதம் பாடிய பெருந்தேவனர்.

மூன்ருவது 'உள்ளம்'. இதனை இச்சைப் பகுதியாகக் கொள்ளுதல் பொருந்தும். இச்சையே ஏனை அறிவிற்கும் செயலுக்கும் அடிப்படை. இச்சைகளே உயிரில் புள்ளிகளாகப் பதிந்துள்ளன என்றும் அவைகளே

அடுத்தடுத்த பிறப்புக்களில் உள்ள செயற்பாடுகளைச் செய்யத் தூண்டு கின்றன என்றும் கூறுவர். "உள்ளத்தால் உள்ளலும் தீதே." என்ற திருக்குறட் பகுதி இப்பொருளுக்கு அரண் செய்வது அறிஞர் உணர்வர்.

பிற்காலத்தே இத்தகைய வேறுபாடுகள் கருதி எடுத்தாளப் பெற வில்லை யெனினும் உள்ளம், நெஞ்சம், மனம் ஆகிய மூன்று சொற்களும் முறையே இச்சை, அறிவு, செயல் என்ற முப்பகுதிகளையும் தனித்தனியே குறிக்க எழுந்த சொற்கள் என்பதைக் காணின் தமிழகச் சான்ருேர்களின் ஆய்வுத் திறன் புலப்படும்.

உள்ளத்தியலார் பிரிக்கும் மூன்று பகுதிகளை நாம் பல கருத்துக் களோடு எண்ணியிருக்கிருேம். உள்ளத்தியலுக்கும் அறிவாராய்ச்சி யியலுக்கும் உள்ள ஒற்றுமை வேற்றுமைகளை இன்னும் சிந்திக்கவில்லை. அவைகளை அடுத்த கட்டுரையிற் காணலாம்.

முடிப்புரை :

மேலே கூறப் பெற்றவைகளால் அறிவாராய்ச்சியியலோடு தொடர் புடைய துறைகள் மூன்று என்பதும், அவற்றுள் முதலாவதாகிய உள்ளத்தியல் மனத்தை மூன்று பகுதிகளின் இணைப்பாகக் கருதுகிறது என்பதும், அம்மூன்று பகுதிகளைப் பற்றிய பலவகை இணைந்த கருத்துக்கள் இவை இவை என்பதும், அம்மூன்று பகுதிகளையும் தமிழ்ச் சான்ருேர் மூன்று தனிப் பெயர்களால் வழங்கினர் என்பதும் விளக்கப் பெற்றன.




## சென்னைக் கந்தகோட்டம்

திரு. கே. எஸ். நரசிம்மன், பி.ஏ., பி.எல்., ஐ.ஏ.ஸ்.,
ஆணையர், அறநிலையத்துறை, சென்னை.

நமது சென்னை மாநகரில், திருமயிலாப்பூர், திருவான்மியூர், திருவொற்றியூர், திருவல்லிக்கேணி ஆகியவற்றில் மிகப் பழமையான கோயில்கள் அமைந்திருப்பது போல, அண்மைக் காலத்தில் தோன்றி மிகவும் புகழ்பெற்று விளங்கும் கோயில்களுள் ஒன்ருகத் திகழ்வது சென்னைக் கந்தகோட்டம் ஆகும். இங்குள்ள முருகனுக்கு "முத்துக் குமார சுவாமி" என்பது பெயர். ஆதலின் இதனை முத்துக்குமாரசுவாமி கோயில் எனவும் வழங்குவர்.

சென்னைக் கந்தகோட்டம் என்னும் இக்கோயில், மிகவும் புகழ்பெற்று விளங்குவதற்குரிய காரணங்கள் பலவற்றுள், திருவருட்பா என்னும் செந்தமிழ்த் தெய்விகத் திருப்பாடல்களை அருளிச் செய்தவராகிய வடலூர் அருட்டிரு இராமலிங்க அடிகளார் (கி.பி. 1823-1873) அவர்கள் நமது இளமைப் பருவத்திலேயே, இக்கோயிலில் மிகவும் ஈடுபாடு கொண்டு அன்புடன் வழிபட்டு வந்ததும், இங்குள்ள முருகப்பெருமான் மீது "தெய்வ மணிமாலை" என்னும் சிறந்த துதிநூலைப் பாடியருளியதுமே யாகும்.

தெய்வமணிமாலை என்னும் துதிநூல், பதினன்கு சீர்க் கழிநெடில் ஆசிரிய விருத்தத்தால் அமைந்து, 31 திருப்பாடல்களைக் கொண்ட தாகும். இதன்கண்,

"ஒருமையுடன் நினதுதிரு மலரடி நினைக்கின்ற
    உத்தமர்தம் உறவு வேண்டும்,
உள்ளொன்று வைத்துப் புறம்பொன்று பேசுவார்
    உறவுகல வாமை வேண்டும்,
பெருமைபெறு நினதுபுகழ் பேசவேண் டும், பொய்ம்மை
    பேசாது இருக்க வேண்டும்,
பெருநெறி பிடித்தொழுக வேண்டும், மத மானபேய்
    பிடியாது இருக்க வேண்டும்,

மருவுபெண் ஆசையை மறக்கவே வேண்டும். உனை
மறவாது இருக்க வேண்டும்,
மதிவேண்டும், நின்கருணை நிதிவேண்டும், நோயற்ற
வாழ்வில்நான் வாழ வேண்டும்,
தருமமிகு சென்னையிற் கந்த கோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்த வேளே;
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே."

"ஈயென்று நான்ஒருவர் இடநின்று கேளாத
இயல்பும்என் னிடம்ஒ ருவர்ஈது
இடுவென்ற போதுஅவர்க்கு இலையென்று சொல்லாமல்
இடுகின்ற திறமும், இறையாம்
நீஎன்றும் எனைவிடா நிலையும்நான் என்றுமுள்
நினைவிடா நெறியும், அயலார்
நிதியொன்றும் நயவாத மனமும்மெய்ந் நிலையென்றும்
நெகிழாத திடமும், உலகிற்
சீயென்று பேயென்று நாயென்று பிறர்தமைத்
தீங்குசொல் லாத தெளிவும்
திரமொன்றுவாய்மையுந் தூய்மையுந் தந்துநின்
திருவடிக்கு ஆளாக் குவாய்;
தாயொன்று சென்னையிற் கந்தகோட் டத்துள்வளர்
தலம்ஓங்கு கந்த வேளே;
தண்முகத் துய்யமணி உண்முகச் சைவமணி
சண்முகத் தெய்வ மணியே"

என்பன போலவரும், சொற்சுவை பொருட்சுவை மிக்க பாடல்கள், அனைவருள்ளத்தையும் கொள்ளை கொள்ளவல்ல அருமை பெருமை வாய்ந்தனவாகும். அருட்டிரு இராமலிங்க அடிகளார் அவர்கள் அருளிச் செய்த தெய்வமணிப் பாடல்களாலே, சென்னைக் கந்தகோட்டம் என்னும் இக்கோயில், தமிழகமெங்கணும் உள்ள அன்பர்கள் அனைவராலும் அறியப்பட்டுப் புகழ்மிக்குத் திகழ்கின்றது எனலாம்.

அருட்டிரு இராமலிங்க அடிகளாருக்குப் பின்னர், வண்ணச்சரபம் தண்டபாணி சுவாமிகள் இக்கோயிலை வழிபட்டு "கந்தகோட்டப்பிள்ளைத் தமிழ்" என்னும் நூலை இயற்றியருளியிருக்கின்றார்கள். இவ்வாறே அண்மைக்காலத்தில் வாழ்ந்து, முருகப்பெருமானின் அருள்பெற்ற பெரும் சான்றோராக விளங்கியிருந்த, சைவசித்தாந்த ஞானபானு அருட்டிரு பாம்பன் அடிகளார் அவர்களும், இக்கோயிலில் எழுந்தருளியுள்ள கந்தவேளுக்குப் புகழ்ப் பாமாலை சூட்டியிருக்கின்றார்கள். மற்றும் குளத்தூர் வரகவி கிருஷ்ணசாமி செட்டியார் என்னும் கவிஞர் பெருந்தகை, செல்வக் கந்தர்தலபுராணம், வேதாந்த விருத்தம், கந்தர் திருப்புகழ், கந்தர்கீர்த்தனை ஆகிய பனுவல்களை இயற்றியுள்ளார்.

இங்ஙனம் சான்றோர்கள் பலரால் துதித்துப் போற்றப்பெற்றுள்ள சென்னைக் கந்தகோட்டம் என்னும் இக்கோயில் தோன்றுவதற்கு, முதன்முதலில் காரணமாக இருந்தவர்கள், இற்றைக்கு 300 ஆண்டுகளுக்கு முன்னர்ச் சென்னை மாநகரில் வாழ்ந்திருந்த திரு. வேளூர் மாரிச் செட்டியார், அவரது ஆருயிர் நண்பராகிய கந்தப்ப ஆச்சாரியார் என்னும் அன்பர்கள் இருவருமேயாவர் எனத் தெரிகின்றது.

இவர்கள் இருவரும் திருப்போரூர் முருகப் பெருமானிடத்தில் அளவிலாத அன்புகொண்டு, கிருத்திகை, சஷ்டி முதலிய புனித நாட்களில், தவறாமல் சென்று வழிபடுதலை நியமமாகக் கொண்டிருந்தனர். ஒரு சமயம் தமது நியமப்படித் திருப்போரூருக்கு நடந்து சென்று வழிபட்டுத் திரும்புங்கால், வழியில் ஒரு வேப்ப மரத்தினடியில் களைப்புற்றுக் கண்ணுறங்கினர். அப்போது அவர்களின் கனவில் முருகப்பெருமான் தோன்றி, தமக்கு ஒரு கோயிலைச் சென்னையிலேயே அமைத்து வழிபடுமாறு பணித்தருளினர். அவர்கள் இருவரும் அக்கனவிற்கு வியந்து பணிந்து, அதன்படியே மிகவும் அன்புடன் முயன்று, பக்தர்கள் பலரின் துணைகொண்டு அமைத்து அருளிய கோயிலே, இன்று பெரிதும் வளர்ந்து சிறப்புற்றுத் திருவருள் கொழிக்கும் சிறந்த நிலையில் ஓங்கி வளர்ந்து திகழ்கின்றது.

சென்னைப் பூங்கா நகர், இராசப்பசெட்டித் தெரு 77-ஆம் எண்ணுள்ள இடத்தில் அமைந்துள்ள இக்கோயில், முதன்முதல் கட்டி முடிக்கப் பெற்றுக் கி.பி, 1673-இல் பிரமாதீச ஆண்டு மார்கழி மாதம் 16-ஆம் தேதியன்று, திருக்குடமுழுக்கு விழாச் செய்யப்பெற்றது எனத் தெரிகின்றது. இவ்வரலாற்றின்படி, இக்கோயில் அமைந்து சரியாக 300 ஆண்டுகள் ஆகின்றன என்பது தெளிவு.

இத்தகைய சிறப்புமிக்க சென்னைக் கந்தகோட்டம், முத்துக்குமார சுவாமிப் பெருமானை அன்பர்கள் அனைவரும் சென்று கண்டு வழிபட்டு இம்மை மறுமை நலங்கள் எல்லாம் எய்துவார்களாக.

குடிமக்களை அகத்தாலும் புறத்தாலும் செழுமைப்படுத்திப் பாதுகாத்தது முற்காலத்தில் திருக்கோயில்களேயாகும். திருக்கோயில்கள் கல்வி பயிற்றுவிக்கும் நிலையங்களாகவும், களிப்பூட்டும் கலைக்கூடங்களாகவும், உடற் பிணிநீக்கும் மருந்தகங்களாகவும், மனிதருக்குள் ஏற்படும் மாறுபாடுகளைத் தவிர்த்து ஒப்பற்ற உறவு நெறியினை வளர்ப்பனவாகவும், இருள் நீக்கி இன்பந்தரும் நிலையங்களாகவும், பிறவாநெறி வழங்கும் திருவருட் பெட்டகங்களாகவும் விளங்கி வந்திருக்கின்றன.

—தவத்திரு குன்றக்குடி அடிகளார்.



## குலசேகராழ்வார்

[வித்துவான் திரு. கா. அ. மணவாளன், பி.ஏ., பி.ஓ.எல்.,]

ஆரங் கெடப்பரன் அன்பர் கொள்ளாரென்றவர் களுக்கே
வாரங் கொடுகுடப் பாம்பிற்கை இட்டவன் மாற்றலரை
வீரங் கெடுத்த செங் கோற் கொல்லிக் காவலன் வில்லவர்கோன்
சேரன் குலசே கரன்முடி வேந்தர் சிகாமணியே.

தமிழ் நாட்டில் 'வேழமுடைத்து மலைநாடு' என்று போற்றப்படும் சேர நாட்டில் திருவஞ்சைக்களம் என்னும் அழகிய ஊர் ஒன்றுண்டு. அவ்வூரைத் தலைநகராகக் கொண்டு பெருமை வாய்ந்த சேரர் மரபில் தோன்றிய திடவிரதன் என்னும் அரசன் ஆட்சி புரிந்து வந்தான். அவ்வரசன் கல்வியிற் சிறந்து விளங்கினவன். அன்புக்கும் அருளுக்கும் இருப்பிடமானவன். அனைத்திற்கும் மேலாகத் திருமால் பக்தனாகவும் விளங்கினான். அவ்வேந்தர் வேந்தனுக்கு அருந்தவப் புதல்வராய் நம் குலசேகரர் மாசிமாதத்துப் புனர்வசு நட்சத்திரத்தில் தோன்றினார். குலசேகரர் தோன்றியதால் பெருமகிழ்வெய்திய அப்பேரரசன் வறியவர்களுக்கும் மற்றவர்களுக்கும் பொன்னும் பொருளும் கொடுத்துப் போற்றினான். உலகம் உய்ய அவதரித்த அம்மைந்தர்க்குப் பத்து நாட்களும் சென்றவுடன் பெரியவர்கள் கூடி சேரர்குலம் தழைக்கத் தோன்றிய 'குலசேகரன்' என்று பெயரிட்டனர். இவ்விதம் குலசேகரர் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து பல கலைகளையும் கற்றுத் தேர்ந்தவரானார். உரிய பருவமுற்றவுடன் அவர் தந்தையராகிய திடவிரதர் தம் மைந்தனுக்கு இளவரசு பட்டம் சூட்டித் தாம் ஓய்வெடுக்கக் கருதினார். விழா நாளைக் குறித்து எங்கும் பறையறைந்து மக்களைக் கூட்டினார். நல்ல நாளில் முடி சூட்டு விழாவும் இனிது நடந்தது. யாவரும் மகிழ்ச்சிக் கடலில் திளைத்தனர்.

பழம் பெரு சேரமரபினரின் பெருமைகளுக்கு ஒப்ப, நல்ல வீரமும், கல்வியும் கொண்டு நல்லாட்சி புரிந்து புகழெய்தி வந்தமையால் இவரிடம் காழ்ப்புணர்ச்சி கொண்ட பாண்டியரும், சோழரும் அடிக்கடி போருக்குத் தூண்டித் தொல்லை கொடுத்தனர். அஞ்சா நெஞ்சம் படைத்த குலசேகரர் அவ்வேந்தர்களைப் போரில் வென்று வாகை சூடினார்.

"கூரார்ந்த வேல்வலவன் கோழியர்கோன்"

"கொல்லி காவலன் மாலடி முடிமேல்
கோலமாம் குலசேகரன்"

"கொல்லியலும் படைத்தானைக் கொற்ற ஒள்வாள்
கோழியர் கோன் குடைக் குலசேகரன்" என்பன போன்ற அடிகள் இவருடைய வீரத்தை விளக்குவனவாகும்.

பின்பு பாண்டிய அரசன் இவருடைய வீரத்தையும் புகழையும் விரும்பித் தன் மகளை இவருக்கு அளித்து மணம் முடித்தான். பாண்டியன் மகளை மணந்து இல்லறத்தே இனிது வாழ்ந்து வந்த குலசேகரர் திருமாலிடத்திலும் அதற்கும் மேலாகத் திருமால் அடியார்களிடத்திலும் பெரும் பக்தி பூண்டு விளங்கினர். அவருடைய அரண்மனையில் முன் அனுமதியின்றியும், தங்கு தடையின்றியும் எப்பொழுதும் திருமாலடியார்கள் வந்து வணங்கி வாழ்த்திப் பரிசில் பெற்றுப் போவது வழக்கமாயிருந்தது. மேலும் குலசேகரர் திருமால் பெருமையைக் கூறுகின்ற சாத்திர நூல்கள் பலவற்றையும் தக்கவொரு ஞானசிரியரையடுத்துக் கேட்டறிந்தார். திருமால் இந்நிலவுலகில் பக்தர்களைக் காக்கவும் தீக்குணமுடையோரை அழிக்கவும் மேற்கொண்ட பத்து அவதாரங்களையும், அவ்வவதாரங்களில் புரிந்தருளிய திருவிளையாடல்களையும் அவ்வெம்பெருமான்களின் குணங்களையும் கேட்டும், படித்தும் அதிலேயே தம்காலத்தைப் பெரிதும் போக்கிவந்தார்.

இவ்விதம் நூல்களில் பயிற்சி பெற்ற குலசேகரருக்கு இராமாவதாரத்தில் மிகுந்த ஈடுபாடு உண்டாயிற்று. ஆதலால் இராமாயணத்தை முறையாகச் சொல்லும்படி மெய்ஞ்ஞானமுடைய ஒரு பெரியவரை அவர் வேண்டிக் கொண்டார். அப்பெரியவரும் அதற்கு இசைந்து நாள்தோறும் அரண்மனைக்கு வந்து அரசருக்கு இராமாயணத்தை முதலிலிருந்து சொல்லிவந்தார். இராமகதையில், கானகத்தில் பிராட்டியாகிய சீதையோடும், இளைய பெருமாளாகிய இலக்குவனோடும் இராமபிரான் பர்ணசாலையிலிருக்கும் பொழுது, சூர்ப்பநகை அங்குவந்ததும் இராமபிரானைத் தான் அடையவேண்டும் என்ற ஆசையால் அதற்குத் தடையாயுள்ள சீதையை அழிக்க முயன்றதும், மற்றும் பல குற்றங்களிழைத்ததும் அதனல் வெகுண்ட தசரதன் மைந்தர்கள் சூர்ப்பநகையை மூக்கறுத்து மானபங்கம் செய்தமையுமாகிய வரலாறுகளை விவரமாகக் கூறினர். பின்பு சூர்ப்பநகை கரனிடம் முறையிட்டதும், தன் தங்கைக்கு இவ்விதம் கொடுமை செய்த அவ்வரசகுமாரர்களை இன்றே ஒழிப்பேன் என்று பெரும் படைதிரட்டிக் கொண்டு வந்து போர் நிகழ்த்தியதும் அப்போரில் இராம இலக்குவர் தனித்தே அப்பெரும்படையை எதிர்த்துப் போர் புரிந்ததாகவும் பாகவதர் கதையைச் சொல்லி வரும் பொழுது குலசேகரர் தன்னை மறந்து வேகமாக எழுந்து முரசு முழக்கிப் படைகளைத் திரட்டும்படி உத்தரவிட்டார். தன்னிலை மறந்தார். உடனே இராமனுக்குத் துணையாகத் தான் போர்க்களம் செல்லவேண்டுமென்று

போர்க்கோலம் பூண்டார். இச்செய்தியை அறிந்த படைத் தலைவர்களும், ஊராரும் வியப்படைந்தனர். முடிவில், இராமபக்தியால் அரசர் நிலை தடுமாறியுள்ளார் என்பதை உணர்ந்தனர். அப்பொழுது நல்லமைச்சர் ஒருவர் இராமாயணம் சொல்லி வந்த பாகவதரிடம் சென்று, போரில் கரனும் அவனைச் சேர்ந்த அரக்கர்களும் இராம பாணத்தால் மாண்டனர் என்ற செய்தியை அரசருக்குத் தெரிவியுங்கள் என்று வேண்டினர். பாகவதரும் அவ்விதமே சொல்லி இராமபிரான் வெற்றிவாகை சூடி சீதையோடு மகிழ்வுற்றிருக்கின்ருன் என்று கூறி முடித்தார். அச்செய்தியைக் கேட்ட குலசேகரர் பெருமகிழ்வெய்தி கண்களில் மகிழ்ச்சிக் கண்ணீர் பொங்கப் பொன்னையும், பொருளையும் வாரி வழங்கி விழாக் கொண்டாடினர்.

இவ்விதம் திருமால் பக்தியில் மிகவும் ஈடுபட்ட ஆழ்வார் எப்பொழுதும் வைணவர்களைக் கூப்பிட்டு நல்ல கதைகளை அவர்கள்பால் கேட்பதும், அவர்களுக்குப் பரிசு கொடுத்து அனுப்புவதுமாக இருந்தார். ஆட்சி முறை பற்றிய அரச விவகாரங்களில் அதிகம் நாட்டம் செல்லாமலிருப்பதை யறிந்த அமைச்சர்கள் ‘நம் அரசருக்கு வைணவர்களின் கூட்டுறவினுலேயே இம்மாற்றங்கள் உண்டாயின. அவர்களோடு பேசாமல் இவரைப் பிரித்து விடவேண்டு’மென்று ஒரு சூழ்ச்சி செய்தனர். அதன்படி குலசேகரர் பூசை செய்து வரும் பெருமானுடைய திருமேனியிலிருந்து ஒரு நவமணிமாலையை யாருக்கும் தெரியாமல் எடுத்து வரச்சொல்லி அதை மறைத்து விட்டனர். மறுநாள் பூசையறைக்குச் சென்று பார்த்தபொழுது பெருமாள் திருமேனியில் நவமணி மாலை இல்லாததையறிந்த ஆழ்வார் திடுக்கிட்டு அமைச்சரைக் கூவியழைத்து விசாரித்தார். அவர்களும் இங்கு எப்பொழுதும் வந்து போய்க் கொண்டிருக்கும் வைணவர்களை அன்றிப் பிறர் யாரும் இக்காரியத்தைச் செய்ய மாட்டார்கள் என்று அறுதியிட்டனர். அவ்வாசகங்களைக் கேட்ட குலசேகரர் காதைத் தம் இரு கைகளாலும் பொத்திக் கொண்டு இராமநாமத்தைப் பலமுறை உச்சரித்தார். அம்மெய்யடியார்கள் ஒரு பொழுதும் இப்பாவகாரியத்தைச் செய்யமாட்டார்கள். தங்கள் உடல், பொருள், ஆவி ஆகிய எல்லாவற்றையும் இறைவனுக்கே செலுத்தியவர்களா இச்செயலைச் செய்வார்கள். அவர்கள் குற்றமற்றவர்கள் என்பதை இப்பொழுதே உணர்த்துகின்றேன் என்று கூறி, எப்படியாவது ஒரு குடத்தில் நல்ல பாம்பு ஒன்றை அடைத்து உடனே கொண்டு வாருங்கள் என்று உத்தரவிட்டார்.

அமைச்சர்களும் கூடி இனி என்ன நேருமோ என்று அஞ்சியிருக்கும் நேரத்தில் அரசர் ஆணைப்படி குடத்தில் நல்லபாம்பை அடைத்துப் பணியாளர்கள் கொண்டுவந்து வைத்தனர். உடனே குலசேகரர், “சபையோர்களே! திருமாலடியார்களான வைணவர்கள் அம்மணி மாலையை எடுத்திரார்கள் என்று நான் கூறியது உண்மையாயின் இப்பாம்பு என்னைத் தீண்டாது ஆகுக” என்று கூறி அக்குடத்தினுள்

யாவரும் அறியத் தம் கையை இட்டார். கொடிய நஞ்சுடைய அந்நாகமும் அவரைத் தீண்டாது ஒதுங்கி ஒரு மூலையில் சுருண்டிருந்தது. குலசேகரர் தம் கையை எடுத்தவுடன் பாம்பு வெளியில் வந்து குலசேகரரை வணங்கிச் சென்றது. அரசரும் அப்பாம்புக்கு ஒரு தீங்கும் நேராமல் அதன் இருப்பிடத்திற்குக் கொண்டுபோய் விடும்படிக் கட்டளையிட்டார்.

அமைச்சர்கள் தங்கள் தவறை ஒப்புக்கொண்டு அரசருடைய பாதங்களில் வீழ்ந்து வணங்கி மன்னிக்குமாறு வேண்டினர். அரசரும் அமைச்சர்களை நோக்கி என் மனம் திருவரங்கனையே எம்பொழுதும் நாடுகிறது. அவ்வரங்கனைக் கண்டுகளிக்கும் நாள் எந்நாளோ என்று நான் ஏங்கி வருகிறேன். நீங்கள் இவ்வுலக வாழ்க்கையை மெய் என்று நம்பி மறுமைக்கு வேண்டியதைச் செய்யாமல் காலம் கழிக்கின்றீர்கள். என் எண்ணமும் செயலும் வேருகவே உள்ளன. நான் திருமால் திருப்பதிகள் தோறும் சென்று வணங்கி 'ஒழிவில் காலமெல்லாம் உடனாய்மன்னி வழுவிலா அடைசெய்ய வேண்டும் நாம்' என்கிறபடி திருவரங்கம், திருவேங்கடம் முதலிய திருத்தலங்களுக்குச் சென்று வழிபட இருக்கிறேன் ஆதலால் "கம்பமத யானை கழுத்தகத்தின் மேலிருந் தின்பமரும் செல்வமும் இவ்வரசும் யான்வேண்டேன்" என்று சொல்லித் தன்மைந்தனுக்குப் பட்டம் சூட்டி ஆட்சியைத் துறந்துப் புறப்பட்டு விட்டார். இவ்விதம் புறப்பட்ட ஆழ்வார் முதலில் திருவரங்கப்பதி புகுந்து திருவரங்கன் தாளிணைகளை வணங்கி எப்பொழுதும் நாத்தழும்ப அந்நாரணனை வழுத்தி மகிழலாயினர். இவ்விதமே திருவேங்கடத்தெம் பெருமானிடமும் பெரும் பக்தி பூண்டு திருப்பதி-திருமலைக்குச் சென்று அவர் அரற்றிப் பாடிய பாடல்கள் நெஞ்சை உருக்குவனவாகும். அரச வாழ்வைத் துறந்து திருமாலடியாராய் வாழ்ந்து திருவேங்கடத்தில் ஒரு கல்லாகவும் பூச்செடியாகவும் பிறந்து "ஒழிவில் காலமெல்லாம் உடனாய் மன்னி வழுவிலா வடிமை செய்யவேண்டும்" என்று இவர் அவ்வேங்கட வனிடம் வேண்டி நிற்குமாறு, நம் உள்ளத்தை உருக்குவனவல்லவோ? இவர் 'பெருமாள் திருமொழி' என்னும் 100 பாடல்களைக் கொண்ட திவ்வியப்பிரபந்தத்தை இயற்றியுள்ளார். வடமொழியில் முகுந்த மாலை என்னும் நூலையும் இயற்றியுள்ளார். இவர் பிறந்த நாளை மணவாளமா முனிவன் வாக்கால் போற்றுவோம்.

மாசிப்புனர்பூசம் காண்மினின்று மண்ணுலகீர்
தேசித் திவசத்துக்கே தன்னில்-பேசுகின்றேன்
கொல்லிநகர்க்கோன் குலசேகரன் பிறப்பால்
நல்லவர்கள் கொண்டாடும் நாள்.

——:o:——




## அப்பர் அருட்குரு

### திருவருட்டிரு. ஞானியார் சுவாமிகள்

[திருக்கோவலூர் ஆதீனம் 5–ஆம் பட்டம் அருட்டிரு. ஞானியார் சுவாமிகள் என்று வழங்கும் அருட்டிரு. சிவசண்முக மெய்ஞ்ஞான சிவாசாரிய சுவாமிகள் அவர்கள் 50-ஆண்டுகட்கு முன் கரையேற விட்ட குப்பத்தில் அப்பர் சுவாமிகள் கரையேறிய ஐதிகத் திருவிழாவின் போது அருளியது. பேரவை முதன்மைப் பிரசாரகர் புலவர் திரு. ஆறுமுகம் அவர்கள் உதவியது].

நிலவுலகில் மக்களாகப் பிறந்தார் இன்பத்தினை வளர்த்துக் கொள்ளும் எண்ணத்தினர். துன்பத்தினைத் துடைத்துக் கொள்ளுந் துணிவினர். காமத்தால் இன்பத்தை வளர்த்துக் கொள்வாரினும் பொருளால் இன்பத்தை வளர்த்துக் கொள்வார் பெரியார். பொருளால் இன்பத்தை வளர்த்துக் கொள்வாரினும் தருமத்தான் வளர்த்துக் கொள்வார் பெரியார். தருமத்தால் இன்பத்தை வளர்த்துக் கொள்வாரினும் ஞானத்தான் இன்பத்தை வளர்த்துக் கொள்வார் பெரியார். அப்பெரியாரினும் பெரியார் எக்காலத்தினும் எவ்விடத்தினும் எச்சாதியினும் எச்சமயத்தினும் இல்லை. துன்பத்தைத் துடைத்துக் கொள்வதினும் மேற் சொன்னவாறே. ஆதலின் துன்பத்தைத் துடைத்துக் கொள்வதற்கும் இன்பத்தை வளர்த்துக் கொள்வதற்கும் இன்றியமையாது வேண்டற்பாலது ஞானமே. இந்த ஞானமும் இறைவனைக் கொண்டன்றி வேறு வகையான் பெறலரிது. உயிர்கட்கு முதலாய் உணர்த்தி வரும் அந்நிலையின் பெறலரிது. உண்ணின்றுணர்த்தி வந்த அப்பரம் பொருளே மானுடர்க்கு ஞானந்தர வருங்கால் தனது இயற்கை வடிவையொழித்து, குருவடிவாகிய மானுடப் போர்வையின் மறைந்து நின்று உபதேசமுகத்தான் உணர்த்தும். உணர்த்துதலும் எல்லா மானுடர்க்கும் அன்று. சரியை கிரியை யோகம் ஆகிய அழிவில்லாத தவத்தினைச் செய்தார் அடையற்பாலனவாகிய பயன்களை அடைதற்குரிய உலகினை எய்தி, அனுபவித்து மீண்டு இப்பூமியின் வந்து, தவஞ் செய்து தலைப்பட்ட நல்லினத்தின் பிறந்து, இருவினையொப்பும் மலபரிபாகமும் எய்திய பக்குவத்தினர்க்கே யுணர்த்தல் நேரும். அவ்வுணர்த்தலும் உபதேச முகத்தானும் நூன்முகத்தானும் அனுபவ முகத்தானும் பலதிறப்பட்டு எய்தும். இப்பலதிறத்தானும் ஞானம் எய்தும். ஞானத்திற்குப் பயன்

அந்தமிலின்பத்தழிவில் வீடு. குருவினைக் குறுகி ஞானம் பெற்றுரே அதுகொண்டு நித்தமாயும் சுத்தமாயும் நிறைந்ததாயுமுள்ள இன்பத்தினைப் பெறுவர். அவர்க்குத் துன்பமில்லை. ஒருவன் தீவினையுடையார் சம்பந்தம் வைத்துக் கொள்வனேல் பதிதனுக ஆதல் கண்கூடு. அங்ஙனமே குருவின் சம்பந்தம் வைத்துக் கொள்வனேல் அக்குரு மேற் கொள்வனவாகிய நலங்களைப் பெறுவன். பொன் தன்னிடத்துள்ள களிம்பை நெருப்பைச் சமீபித்துப் போக்கிக் கொள்கிறது. அங்ஙனமே, மக்களாகப் பிறந்தார் குருவினைச் சமீபித்து தம்மிடமுள்ள பாவத்தைப் போக்கிக் கொள்கின்றனர். நெருப்பு உலர்ந்த விறகுகளை எரிக்கின்றது. அங்ஙனமே குரு தன் மாணுக்கன் பாவங்களைக் கணத்துள் ஒழிக்கிருன்.

"அருவாகி நின்ருனை யாரறிவார் தானே
யுருவாகித் தோன்ருனே லுற்று."

"தம்முதல் குருவுமாய்த் தவத்தினி லுணர்த்த."

"குருவே சிவமெனக் கூறினன் நந்தி."

"அருபரத் தொருவன் அவனியில் வந்து
குருபர ஞகி யருளிய பெருமை."

"அறியாதன வெல்லா மாங்காங் கறிவித்துப்
பிறியாதன வெல்லாம் பேசி—நெறியாரும்
பக்குவத்தின் மெய்ஞ்ஞானப் பாலருத்து விக்குமொரு
சற்குருவைப் போலுமுண்டோ தாய்."

ஆதித்தனு லன்றி மாசிலாச் சூரியகாந்தக் கல்லினிடத்து நெருப்புத் தோன்ருது. அங்ஙனமே அருள் வடிவாகிய குருவினுலன்றி யொருவற்கு ஞானமுண்டாகாது. ஞானம் குருவிறைற்ருன் உண்டாகும். ஞானத்தாற்ருன் நிறைந்தவின்பம். ஆதலின் நிறைந்த இன்பத்திற்கு மூல காரணம் குருவே.

உலகில் குருவெனப்படுவார் பல திறத்தினர். வசியம் ஆகருஷண முதலியவற்ருல் இவ்வுலகத்திற் சுகந்தருவான் ஒரு சார்குரு. நற்கருமங்களைத் தெரித்தலினுல் அவ்வுலகத்தில் சுகந்தருவான் மற்ரெரு சார்குரு. நல்லறிவை விளக்கிச் சமை முதலிய வரச் செய்வான் வேருெரு சார்குரு. உலக விஷயத்தைப் பொய்யெனக் காட்டிச் சிவபெருமானிடத்து இச்சை விளைவிப்பான் பிறிதொரு சார்குரு. சாஸ்திரார்த்தம் தெரிவிப்பான் இன்னும் ஒரு சார்குரு. ஐய விபரீதங்களை யகற்றி உறுதி வரச் செய்து சமாதியிலிருத்துவன் ஒரு சார்குரு. தத்வ தரிசனஞ் செய்விப்பான் ஒரு சார்குரு. ஆத்ம தரிசனஞ் செய்விப்பான் ஒரு சார்குரு. சிவதரிசனஞ் செய்விப்பான் ஒரு சார்குரு. எல்லாஞ் செய்விப்பதோடு சிவபோகத்தழுத்துபவனே அருட்குரு.



குருவின் பெருமையெல்லாம் தன்னடியடைந்தாரைச் சிவபோகத் தழுத்திச் சிவானுபவம் சுவானுபவமாகச் செய்தலே.

இப்பூமியில் குருவெனப் பலர் வந்தார்கள்; வருகிறார்கள்; வருவார்கள்.

எல்லாருள்ளும் திருநாவுக்கரசுசுவாமிகளாகிய அப்பரே சிறந்து முன்னிற்பார். பாகார்மொழிப் பார்வதி நாயகர் வதி சீகாழியின், மூன்றும் ஆண்டில், பூவான் மலிந்த நீர்நிறை பொய்கைக் கரையில், சச்சிதாநந்தத் தாயின் ஞானப்பாலுண்டு, ஞானசம்பந்தரெனக் காரணப் பெயர் பெற்ற சுவாமிகளே தம்வாய் திறந்து ஆற்ற அன்புடன் 'அப்பரே' யென அழைத்திருப்பரேல் இவரினும் ஞானசாரியாருண்டோ? அப்பர் சுவாமிகள் கொல்லாமை என்னும் அருட்குணம் இருந்தமையறிந்து சமண்சமயச் சார்புபெற்றமை இவரது இளமையிலேயே இவரது அருட்குணத்தை விளக்குகின்றதன்றோ!

"கொல்லாமை மறைந்துறையு மமண்சமயங்
குறுகினர்" என்றது பெரிய புராணம்.

நீற்றறையிலிடுவித்தல், விடமுண்பித்தல், யானை கொண்டு மிதிப்பித்தல், கல்லுடன் பாசம் பிணித்துக் கடலிடைப் பாய்ச்சுவித்தல் முதலிய பொல்லாங்கு பல செய்த பல்லவனும் வந்து பணிந்த தருணம்

சிறிதும் கோபங்கொள்ளாது, அவனது பழவினைப் பாசமகற்றி, மழவிடையோன் மரைமலரடியை அடைவித்தனரேல் அப்பமூர்த்திகள் அருட்குருவெனற்கு வேறுமொரு சான்றும் வேண்டுவதோ !

திங்களூர் வாழ்ந்த அந்தணரின் மேம்பட்ட அப்பூதி அடிகள் தந்தநயன் வாழைக்குருத்தை யரியப்புகுந் தருணம் நாகந்தீண்டி இறந்ததனை மறைத்து எம்பெருமானை யமுதுசெய வேண்டுமென அப்பமூர்த்திகளை அடிவணங்கியபோது, நம்பர் திருவருளானே நன்குணர்ந்த சுவாமிகள் அளவிறந்த கருணையராய்ச் சவத்தினைக் கொணர்வித்து, " ஒன்று கொலா " மெனப் பதிகம் எடுத்து, உடையான் சீர்பாடி விடத்தை நிவர்த்தித்து, அப்பூதியடிகள் தநயனைப் பிழைப்பித்தனரேல் அப்பமூர்த்திகள் அருட்குரு என்பதற்கையமுண்டோ ? " அளவிறந்த கருணையராய் " என்றார் சேக்கிழார் சுவாமிகள்.

மிருதுன்பெய்தி விபூதியின் பெருமையினையும், பஞ்சாட்சரத்தின் பெருமையினையும், சிவபெருமான் பெருமையினையும், நாமெலாமறியப் பல அற்புதப்பாசுரங்களால் அறிவித்து, நம்மையும் நம்முன்னோரையும் நம்பின்னோரையும் பிறவிக்கடலினின்றும் முத்தியங்கரையேற்றி, முதல்வனோடுங் கூட்டி, அழியா ஆநந்தத்தழுத்துவது நம்சுவாமிகட்கு இயல்பு எனில் அப்பர் அருட்குரு என ஒருமுறை கூறின் போதியதோ. மும்முறை யன்றோ அப்பர் அருட்குரு! அப்பர் அருட்குரு! அப்பர் அருட்குரு!" என்று கூறல் வேண்டும்.

கூறிக் கூறிக் கோதகன்று குணம் பெற்றுக் குறைவில் இன்பங் கூடுவோமாக. சுபம். சுபம். சுபம்.

திருச்சிற்றம்பலம்.

"ஈச னென்னை யறிந்த தறிந்தனன்
ஈசன் சேவடி யேத்தப் பெறுதலால்
ஈசன் சேவடி யேத்தப்பெற் றேனினி
ஈசன் றன்னையும் யான்மறக் கிற்பனே.

ஒட்டை மாடத்தி லொன்பது வாசலும்
காட்டில் வேவதன் முன்னங் கழலடி
நாட்டி நாண்மலர் தூவி வலஞ்செயில்
வாட்டந் தீர்த்திடும் வான்மியூ ரீசனே."

திருச்சிற்றம்பலம்.

அருளோசை

பிற்சேர்க்கை பிப்ரவரி 1973.

பாடம் 8 வினவிடை சந்தா எண்............

[வினக்கள் இந்த இதழ்க்கட்டுரைகள் பற்றியனவே. விடைகள் வினக்களின் கீழேதான் எழுதவேண்டும். சொந்தக் கையெழுத்தில் எழுதி, 28-2-73-க்குள் அனுப்பவேண்டும்].

மதிப்பெண் சமம்] [மதிப்பெண் 100

1. அறிவாராச்சியியலோடு இணைந்து நிற்கும் மூன்று துறைகள் என்ன? அவற்றினின்றும் தெரிந்து கொள்ளப் பெறுவதென்ன?

2. சைவ சமயம் உலகெங்கும் பரவியிருந்தமைக்குச் சான்றுகள் தருக.

3. அப்பர் அருட்குரு என்பதற்குக் கூறப் பெறும் காரணங்கள் எவை ?

4. குலசேகராழ்வாருக்கு இராமகாதையில் பேரன்பு உண்டென்று எப்படித் தெரிகிறது ?

5. சிவலிங்கத்தைப் பற்றிச் சேக்கிழார் கூறும் விளக்கத்தை எழுதுக.

6. கந்தகோட்டப் பெருமையைச் சுருக்கி வரைக.

7. மனம், நெஞ்சம், உள்ளம் இவற்றை விளக்கி அதனின்றும் தமிழனின் திறனாய்வை எடுத்துக் காட்டுக.

8. சமணசமயத்தின்படி கன்மம் எத்தனை வகைப்படும் என்பதை விளக்கிக் கூறுக.

9. மனத்தூய்மையின் அவசியத்தைக் காரணங் காட்டி விளக்குக.

10. "மகாவிரதம்", "சமுவரம்", "திரைத்தினம்"—சிறு குறிப்புக்கள் வரைக.

கையெழுத்து

[பெரிய எழுத்தில் தெளிவாக எழுதுக]

பெயர் வயது

கதவு எண், தெரு

ஊர்—அஞ்சல் நிலையம்

மாவட்டம்

இப்பகுதியில் விடைகளை எழுதி உரிய அஞ்சல் தலைகளையொட்டிக் கீழ்க்காணும் முகவரிக்கு அனுப்ப வேண்டும் :—

"அருளோசை"
தமிழ்நாடு தெய்விகப் பேரவை,
9, மகாராஜா சூரியராவ் சாலை,
ஆழ்வார்ப்பேட்டை, சென்னை-600018.

## STATEMENT ABOUT OWNERSHIP AND OTHER PARTICULARS ABOUT ARULOSAI

FORM IV (See Rule 8)

| | |
|---|---|
| 1. Place of Publication | 9, Maharaja Surya Rao Road Madras-600018 |
| 2. Periodicity of its Publication | Monthly |
| 3. Printer's Name | A. Narayanaswami, B.A. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| 4. Publisher's Name | A. Narayanaswami, BA. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| Address | 9, Maharaja Surya Rao Road Madras-600018 |
| 5. Editor's Name | A. Narayanaswami, BA. |
| (Whether citizen of India) | Yes |
| (if foreigner, state the country of origin) | ...... |
| Address | 9, Maharaja Surya Rao Road Madras-600018 |
| Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one percent of the total capital | Tamil Nadu Deivika Peravai 9, Maharaja Surya Rao Road Madras-600018 |

I, A. Narayanaswami hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

*Date* 15—2—73

A. Narayanaswami, B.A.
*Publisher.*

---

## "அருளோசை"

### விஞ விடைப் பகுதி—ஜனவரி-73
### பரிசு பெற்றவர்கள்

முதல் பரிசு : திரு. ஏ. எச். இராஜகோபாலன், பரமக்குடி இராமநாதபுரம் மாவட்டம். சந்தா எண் 217.

இரண்டாம் பரிசு: திரு. சுவாமி வெங்கடாசலம், அம்பல், தஞ்சை மாவட்டம். சந்தா எண் 1719.

மூன்றும் பரிசு: திரு. வி. காளியம்மாள், கம்பம், மதுரை மாவட்டம். சந்தா எண் 218.

நான்காம பரிசு: திரு அ. மகாலிங்கம் திருமழபாடி, திருச்சிராப்பள்ளி மாவட்டம், சந்தா எண் 353.